

# குரு அருள் திரு உந்தியார்

ஆக்கியோன் :
சற்குருதாசன்

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்
இலக்கியப் பதிப்பகம்
32, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை-1.

1971

திருவார் திரு அருட்சக்தி அன்னையார் அவர்களின்

# ஆசியுரை



ஆண்டவர் வரலாறும், சட்டத்தின் அம்சங்களும் சுருக்கமாக இதில் அமைந்துள்ளன. சென்னை திரு. குப்தா சுவாமியின் குமாரத்தியும், மருமகனும் பேரன்களும், பேர்த்தியரும் இங்கு வந்தபோது பாடினர். மிகவும் நன்றாக இருந்ததால் இதனை அச்சிடும்படி தாய் கூறியது. அவ்வாறே இப்போது அச்சாகி வெளிவருகிறது. அடியவர், அன்பர்கள் அன்புடன் பாடி, இம்மை மறுமை நலங்கள்யாவும் பெற்று இன்ப வாழ்வாற்றத் திருவருள் துணை புரியுமாக!

திருவருள் ஸ்ரீ அருள்சக்தி தாய்

பதிப்பக வெளியீடு எண்—2



# குரு அருள் திரு உந்தியார்

## சமர்ப்பணம்

அருட்பெருங்கருணையால் அடியேனையும் ஆட் கொண்டருளி, இணையிலாத் துணையாய், உள் ளும் புறமுமாய், ஒவ்வொரு கணத்தும் காவல் புரிந்தும், கரணம் அனைத்திலும் கலந்து நிறைந் தும், பேரின்பம் ஊட்டும் பெருந்தகையாளராம் சற்குரு ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளின் இணை யடி மலர்களில் இச்சிறு நூலைச் சமர்ப்பிக்கின் றேன்.

சற்குருதாசன்

விரோதிகிருது ஐப்பசி 1 திங்கட்கிழமை
தீபாவளி வெளியீடு



வெளியிடுவோர் :
ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் இலக்கியப்பதிப்பகம்,
அடியார்கள் இல்லம்,
தொலைபேசி : 34600
32. கோவிந்தப்பநாய்க்கன் தெரு, சென்னை-1.
1971
விலை 15 காசு



# குரு அருள் திரு உந்தியார்

* ஆரணம் ஆகமம் ஆகி அமைந்தவன்
அன்புரு வானுன்என் றுந்தீபற—ஒப்பில்
இன்பம் கொடுப்பான்என் றுந்தீபற. 1

காரணத் துக்கெல்லாம் காரணம் ஆனேன்சிற்
பூரணன் ஆனுன் றுந்தீமற—இது
பொய்யல்ல மெய்யென்றே உந்தீபற 2

செந்தமிழ் நாடு புரிந்த தவம்ஒரு
சேயுரு வானதென் றுந்தீபற—அதைத்
தேவர் தொழுதார்என் றுந்தீபற. 3

அந்தக் கணத்தில் அருள்மழை பெய்யக்கண்(டு)
ஆர்த்தார் முனிவர்என் றுந்தீபற—பல
ஆன்ருேர் புகழ்ந்தார்என் றுந்தீபற. 4

ஆவுடை யம்மைநல் வீரபத் ரப்பிள்ளே
ஆனந்தம் கொண்டார்என் றுந்தீபற—ஊரார்
ஆர்வம் மிகுந்தார்என் றுந்தீபற 5

மேவும் இருடியர் பட்டிமுன் செய்திட்ட
மேன்மைத் தவம்என்றே உந்தீபற—சைவ
வேளாண் குலத்தவம் உந்தீபற. 6

வளரும் கலேமதி போலக் குழந்தை
வளர்ந்தது நன்றேயென் றுந்தீபற—ஓர்
இளஞ் *சுப்ர மண்யம்என் றுந்தீபற. 7

தளருவோர்க் கெல்லாம் தகும்வழி யீவோன்
தளர்நடை யிட்டான்என் றுந்தீபற—மூலே
சார்ந்தமர்ந் திட்டான்என் றுந்தீபற. 8

---

*ஆரணம்—வேதம். *சுப்ரமண்யம்—சுவாமிகளின் திருநாமம்

கண்கனை மூடிக் கருணை யொளிமுகம்
காட்டினன் யார்க்கும்என் றுந்தீபற—மேலோர்
கண்டு களிகொண்டார் உந்தீபற. 9

எண்கள் எழுத்துக்க ளைக்கற்கப் பள்ளிக்கும்
ஏகி அமர்ந்தார்என் றுந்தீபற—யார்க்கும்
எல்லாம்கற் பித்தார்என் றுந்தீபற. 10

ஏர்த்தொழில் ஒன்றேநற் சீர்த்தொழி லாம்என
எண்ணி உழச் சென்றார் உந்தீபற—உளம்
நண்ணி உழவந்தோர் உந்தீபற. 11

பார்க்குள் அவர்அடி வைத்த இடம்எல்லாம்
பாலாய்ப் பெருகிற்றென் றுந்தீபற—கண்டு
பாரோர் மகிழ்ந்தார்என் றுந்தீபற. 12

ஏழைமக் கள்வாழ்வுக் கான பொருள்விலை
ஏற்றத்தைக் கண்டார்என் றுந்தீபற—பாண்டில்
ஏற்றிக் கொணர்ந்தார்என் றுந்தீபற. 13

ஏழைகட் குப்பொருள் கொண்ட விலைக்கே
எடுத்துக் கொடுத்தார்எள் றுந்தீபற—இது
என்றும் நிகழ்ந்ததென் றுந்தீபற 14

வீட்டுக் குதவாத பிள்ளையென் றின்றோர்
வெறுத்தங் குரைத்தனர் உந்தீபற—அண்ணல்
வெளியே கிளம்பினர் உந்தீபற 15

ஏட்டை எதிர் செல உய்த்த வைகைபாய்
எழில்மது ரைக்குற்றார் உந்தீபற—ஓர்
தொழிலில் அமர்ந்திட்டார் உந்தீபற. 16

ஆருயி ரின்கணக் கெல்லாம் பார்க்க வந்தோர்
ஆங்கோர் கணக்கரென் றுந்தீபற—நல்ல
அங்காடி யிற்சேர்ந்தார் உந்தீபற. 17

சீருற வேஅதி காலை வைகைநதி
சேர்ந்துநீ ராடினர் உந்தீபற—முன்னோன்
சேவைகண் டாடினர் உந்தீபற. 18

ஜோதி யுருவினில் தோன்றிய பூரணர்
ஆதி யுருக்கண்டே உந்தீபற—ஓடி
அன்போ டணைந்தனர் உந்தீபற. 19

ஓதி யுணரற் கரிய கணேசன்
ஒருசிலை யானுன்என் றுந்தீபற—அண்ணல்
உற்றுப்பூ சித்திட்டார் உந்தீபற. 20

கூடுமெய் யன்பர் குழாங்கள் பெருகியோர்
கோயில் அமைத்திட்டார் உந்தீபற—நன்றே
கும்பிட்டுய் வும்பெற்ருர் உந்தீபற. 21

நாடும் அடியர் குழாங்கண் டங் காடி
நடத்துநர் அச்சுற்ருர் உந்தீபற—வட
நாட்டுக் கனுப்பினுர் உந்தீபற. 22

சென்ற இடம் எல்லாம் தேவன் அருளினுல்
செல்வம் கொழித்ததென் றுந்தீபற—அன்பர்
தேடி வருந்தினர் உந்தீபற. 23

அன்ருெரு நாள்அங் கயற்கண்ணி தோன்றி
அழைத்தனள் கூடற்கென் றுந்தீபற—கடை
யாளரும் கூப்பிட்டார் உந்தீபற 24

இஸ்லாம் கிறித்தவ மாதி சமயங்கள்
எல்லாமும் ஆய்ந்தனர் உந்தீபற—பொருள்
ஏகம் எனக்கண்டார் உந்தீபற. 25

நல்லார் அருளாளர் யாரும் உரைத்திட்ட
ஞானப் பொருள் கண்டார் உந்தீபற—ஆளும்
நற்சட்ட மும்கண்டார் உந்தீபற. 26

புறச்செயல் எல்லாம் ஒடுக்கி யொதுக்கி
அகத்துள் விழித்தனர் உந்தீபற—நன்(று)
அமர்ந்துள் ளடங்கினர் உந்தீபற. 27

அறச்செம்மல் சற்றும் அசையா துணவும்
அருந்தா தடங்கினர் உந்தீபற—காணும்
அன்பர் வருந்தினர் உந்தீபற. 28

அங்காடியர் அண்ணலைப் புறத் தோர்பால்
அமர்த்தக் கருதினர் உந்தீபற—அய்யர்
அங்கிருந் தேகினர் உந்தீபற. 29

எங்கோடி னும் அன்பர் தம்மைப் புரப்பவன்
ஈர்த்தனன் செந்தூர்க்கென் றுந்தீபற—அருள்
ஏற்றம் அளித்தான் என் றுந்தீபற. 30

இழுமென் றருவி இழியும் அழகார்
செழும்பொதி காசலத் துந்தீபற—அண்ணல்
சேர்ந்து திகழ்ந்தார் என் றுந்தீபற. 31

விழுமிய செண்பகா தேவிக்(கு) அருகில்
விளங்கும் குகை கண்டார் உந்தீபற—தவம்
* வேட்டுள் ளமர்ந்திட்டார் உந்தீபற. 32

பல்லாண் டருந்தவம் பண்ணிமெய்ஞ் ஞானப்
பழமாய்த் திகழ்ந்தனர் உந்தீபற—இந்தப்
பாருல கோங்கவே உந்தீபற. 33

நல்லார்கள் போற்ற இடையில்வந் தன்னையை
நன்றடக்கம் செய்தார் உந்தீபற—பின்னர்
நற்றவத்(து) ஆழ்ந்திட்டார் உந்தீபற. 34

உலகத் துயிர்களுக் குற்றதுன் பம்பல
ஓட்டி யுவப்பீந்தார் உந்தீபற—பாருக்
கோர்சட்டம் ஈந்தார் என் றுந்தீபற. 35

பலகற்க வேண்டாம் பழகி உயர்கென்(று)
உலகில் சட்டம் தந்தார் உந்தீபற—யாரும்
உய்யும் நெறி தந்தார் உந்தீபற. 36

அதிகாலை நாள்தோறும் தண்ணீரி லே மூழ்கி
அருள் நீ றணி கென்றார் உந்தீபற—நோய்
அகற்றித் திகழ் கென்றார் உந்தீபற. 37

துதி செய் தொருகோயில் மூன்று முறையன் பால்
சுற்றிப் பணி கென்றார் உந்தீபற—அருள்
பெற்றுப் † பிறங்கென்றார் உந்தீபற. 38

* வேட்டு—விரும்பி, † பிறங்குதல்—பிரகாசித்தல்.

திருநீறு பைந்துழாய் சேர்ந்ததண் ணீரைச்
சிறிது பருகென்றார் உந்தீபற—ஞானச்
செல்வம் பெறுகென்றார் உந்தீபற 39

கருநீர்மை தீரக் கணமேனும் கண்மூடி
அருள் நிட்டை செய்கென்றார் உந்தீபற—பர
மானந்தம் எய்தென்றார் உந்தீபற. 40

சைவ உணவொன்றே உண்ணுகென்றார்; தூய
சத்வம் பெறு கென்றார் உந்தீபற—வெள்ளி
தனில் விர தம் என்றார் உந்தீபற. 41

தெய்வம் ஒன்றே யென்றார் எந்தச் சமயமும்
தீங்குசெய் யாதென்றார் உந்தீபற—நம்பிச்
செய்க துதியென்றார் உந்தீபற. 42

பஞ்சமா பாதகம் கூடாதென்றார் பரி
பக்குவம் எய்தென்றார் உந்தீபற—அருள்
மிக்குறும் என் றிட்டார் உந்தீபற, 43

நஞ்சொத்த கன்மங்கன் சூழ்ந்து பிணிவந்தால்
நன்னீரி லாடென்றார் உந்தீபற—நாளும்
நன்றிரு முறையென்றார் உந்தீபற. 44

காலை மாலை தண்ணீ ராடி நீறிட்டுக்
கருத்தன் பேர் சொல்லென்றார் உந்தீபற—உற்ற
கன்மத்தை வெல்லென்றார் உந்தீபற. 45

சாலை மருத்துவ மோடு மருந்தைத்
தவிர்த்தருள் நாடென்றார் உந்தீபற—இது
சான்றோர் நெறி யென்றார் உந்தீபற. 46

மருந்தஃ தியற்கைக்கு மாறென்றார், கன்மம்
வளர்க்கும் பகையென்றார் உந்தீபற—ஜென்மம்
மற்றும் உண்டா மென்றார் உந்தீபற. 47

மருந்தருந் தாதருள் நாடின் பிணிகளும்
மாறும் உண்மையென்றார் உந்தீபற—வினை
மாளும் முத்தியெய்தும் உந்தீபற. 48

தெய்வத்தைக் கூவிக் கழைக்கின்ற ப்ரார்த்தனை
செய்தலா காதென்றார் உந்தீபற—செய்யின்
உய்தலா காதென்றார் உந்தீபற. 49

செய்துள்ள ப்ரார்த்தனை யைப் பூர்த்தி பண்ணுக
செய்யற்க வேறென்றார் உந்தீபற—துதி
செய்தருள் எய்தென்றார் உந்தீபற. 50

குறையனைத்தும் தவிர்த் தாளென்றுள் ளன்பினால்
கோரித்தீ தோட்டென்றார் உந்தீபற—நிறை
கொண்டு விளங்கென்றார் உந்தீபற. 51

மறைபுகழ் மாணடி நாடுக ஜோதிடம்
மாந்த்ரீகம் நாடற்க உந்தீபற—ரஸ
மணியாதி பூணற்க உந்தீபற. 52

உண்மையும் அன்பும் ஒழுக்கமும் ஞானமும்
உய்வுதரும் என்றார் உந்தீபற—இது
தெய்வநெறி என்றார் உந்தீபற. 53

திண்மை மிகும்மனத் தோடிந் நெறிபேணின்
சேரும் செல்வம் என்றார் உந்தீபற—முற்றும்
தீரும்வினை என்றார் உந்தீபற. 54

நீதி மன்றம் நாடிச் செல்லற்க, தெய்வநன்
னீதியை நாடென்றார் உந்தீபற—அருட்
ஜோதி கண் டுய்கென்றார் உந்தீபற. 55

ஆதி நடு முடி வானபரன் அருள்
அன்பர்க் கருத்திட்டார் உந்தீபற—உண்மை
இன்பம் அளித்திட்டார் உந்தீபற 56

ஊரூர் தொறும் சென்றே உத்தம ரைத்தேடி
உண்மை நெறிசொற்றார் உந்தீபற—உள்ளத்
திண்மை அளித்திட்டார் உந்தீபற. 57

சீரூர் உபவாச மார்க்கம் வகுத்துள்ளே
செப்பி யழைக்கின்றார் உந்தீபற—அன்பாற்
சேர்த்தே அணைக்கின்றார் உந்தீபற. 58

நிருவிகற் பம் காட்டி நேயத்தோ டீர்த்தருள்
நிட்டைப் பயன் ஈவார் உந்தீபற—ஈடில் 59
நின்மல மாக்குவார் உந்தீபற

கருவி கரணம் அனைத்தும் தானுகிக்
கருணை யமுதாவார் உந்தீபற—கரை 60
காணுச் சுகம்ஈவார் உந்தீபற.

அருட்சக்தி யன்னையை ஆண்டார்; உயிர்கட்
கருள்வழி காட்டென்ருர் உந்தீபற—இதை 61
ஆரும் அறிவாரென் றுந்தீபற.

அருட்கொடி சாமியை ஆண்டார்; அருகில்
அழைத்தணைத் துக்கொண்டார் உந்தீபற—இதை 62
அகிலம் அறியுமென் றுந்தீபற.

அருள் ஞானச் செல்வத்தா யைத்தடுத் தாட்கொண்
டருள்மணம் கொண்டாரென் றுந்தீபற—அடி 63
யார்கள் வளர்கவென் றுந்தீபற.

அருள் ஞானம் செல்வம் அனைத்தும் பெருக வென்
றன்புடன் கூடுவோம் உந்தீபற—நன் 64
றவர்புகழ் பாடுவோம் உந்தீபற.

---

# பிரார்த்தனை

பரம காருண்ய மூர்த்தியே! பரப்ரம்ம சொரூபமே! அடியார் அல்லலைப் போக்கும் அருந்துணையே! இப்புவிமேல் உன் அருட்சட்டம் ஏற்று நடக்கும் அடியார்களான எவரும் ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகளாய், தீமைகளைக் களைந்து, நன்மைகளைப் பேசியும், வளர்த்தும் நாளும் உன் வழி நடக்க நல்லருள் செய்வாய்; இறைவா! இறைவா! இறைவா!

## இருடியர்பட்டிக் குருநாதர் பிள்ளைத் தமிழ்

| | | |
|---|---|---|
| மெல்லட்டைப் பிரதி | — | 1-10 |
| ,, 10 பிரதிகள் | — | 10-00 |
| வல்லட்டைப் பிரதி | — | 1-60 |
| ,, 10 பிரதிகள் | — | 15-00 |
| **அருட்ப்ரஸாதம்** | — | **0-10** |
| **குரு அருள் திரு உந்தியார்** | — | **0-15** |

கிடைக்கும் இடங்கள்:

1. **ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் சந்நிதானம்**
இரெட்டியப்பட்டி, நாகலாபுரம் அஞ்சல்,
கோவில்பட்டி வழி, (திருநெல்வேலி மாவட்டம்.)

2. **ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் இலக்கியப் பதிப்பகம்,**
32, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, **சென்னை-1.**

3. **ஸ்ரீ R. இராமலிங்கம் B.A.,**
தொலைபேசி: 31018
பிஸினெஸ் பிரமோட்டர்ஸ், செல்வவிருத்தி பில்டிங்ஸ்
115, டாக்டர் நஞ்சப்பாரோடு, **கோயம்புத்தூர்-18.**

4. **ஸ்ரீ K. திருநாவுக்கரசு செட்டியார்**
93, கூடலூர் செங்கல்வராயமுதலித் தெரு,
**வேலூர்,** (வட ஆற்காடு மாவட்டம்.)

5. **ஸ்ரீ R. அயில்நாயுடு, 'நந்தினி டைமண்ஸ்'**
தொலைபேசி: 6780
54, ஜாபர்ஸாவீதி, **திருச்சிராப்பள்ளி-8.**



# ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் இலக்கியப் பதிப்பகம்



பரம ஏழைகளும் பக்குவம் பெற அருள்ஞானச் சட்டத்தை இவ்வுலகிற்கு அருளிய குருபரம் பொருளின் திருவருள் பெருமையை இவ்வுலகில் பரப்புவான் வேண்டி, அக்குரு அருளாலே இப் பதிப்பகம் அண்மையில், சென்னை மாநகரில் 16—5—1971ல் துவக்கப் பெற்றது. இப்பதிப்பகத்தின் நோக்கம், உலகிலுள்ள எல்லா மக்களும் அருட்சட்ட நெறி நின்று, அருளாட்சி வழி நடந்து, சாதி, சமய, மத பேதமற்று, எங்கும் நின்று இலங்கும் இறை இன்பத்தை யடைந்து உய்வதுவேயாம். மேலும் விரிவுகள் பெற விழைவோர் கீழ்க்கண்ட முகவரி யுடன் தொடர்பு கொள்ளவும்.

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்
இலக்கியப் பதிப்பகம்

அடியார்கள் இல்லம்: தொலைபேசி எண் : 34600
32, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை-1.